(உகூ) தவமுடையோர்க்கெனச் (உஅ) சொல்லியென்க.

உஅ. கூறினையென்பது வினையெச்சமுற்று.

உஎ. வேறுபடுநனந்தலையென்றது, துறந்துபோயிருக்குங்காட்டினை. பெயர - அந்நரை மூதாளனைக் காட்டிலே பெயரவேண்டி.

(உஉ) செருப்புகன்முன்ப, (உ) வேட்டனையென்றும்(உக) பெற்றனை யென்றும் நீ செய்தயாகங்களாகிய (உரு) அன்னவையிற்றிற்கு யான் மருண்டேனல்லேன்; நின்னை நல்வழி (உச) ஒழுகுவித்தநின்ற நரைமூதாளனை (உஅ) நின்படிமையானே (உஎ) இல்லறவொழுக்கினை ஒழித்துத் துறவறவொழுக்கிலே செல்ல (உஅ) ஒழுகுவித்தனை; அவ்வாறுசெய்வித்த நின்பேரொழுக்கத்தினையும் பேரறிவினையும் தெரிந்து யான்மருண்டேனென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவனது நல்லொழுக்கமும் அதற்கேற்ற நல்லறிவுடைமையும் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) அ. தெரிபுகொண்ட. உரு. வண்மையுமாண்மையும்.

கO. தோளுறெதிரத்து. உஎ. வேறுபுல. கச. நூடுநிலையுற்ற. உஅ. கூறுவை.

உச. முதிருணர்ந்தொழுகும்.

(எரு.) இரும்புலி கொன்று பெருங்களி றடூஉ
மரும்பொறி வயமா னனைய பல்வேற்
பொலந்தார் யானை யியறேர்ப் பொறைய
வேந்தரும் வேளிரும் பிறருங் கீழ்ப்பணிந்து
நின்வழிப் படாஅ ராயி னெய்மிக்
கறையுறு கரும்பின் றீஞ்சேற் றியாணர்
வருநர் வரையா வளம்வீங் கிருக்கை
வன்புலந் தழீஇ மென்பா றோறு
மரும்பறை யினைஞர் புல்லிகல் படுத்துக்
கள்ளுடை நியமத் தொள்விலை கொடுக்கும்
வெள்வர குழுத கொள்ளுடைக் கரம்பைச்
செந்நெல் வல்சி யறியார் தத்தம்
பாடல் சான்ற வைப்பி
னாடுட னாடல் யாவண தவர்க்கே.

இதுவுமது.
பெயர் - (சு) தீஞ்சேற்றியாணர்

௫ - ௬. நெல்மிக்கு அறையுறு கரும்பென்றது நெல்லின்கண்ணே அந்நெல்லை நெருக்கி மிக எழுந்தமையானே அறுக்கலுற்ற கரும்பென்றவாறு.

இனி, அந்நெற்றான் கரும்பின் மிக எழுந்து அதனை நெருக்கின்மையால், அந்நெல்லிற்கு இடமுண்டாக அறுத்த கரும்பெனினுமாம்.

௬. தீஞ்சேறு - இனியபாகு. யாணரென்றது அத்தீஞ்சேற்றது இடையறவின்மையை.

இச்சிறப்பானே, இதற்கு,'தீஞ்சேற்றியாணர்'என்று பெயராயிற்று.

(௭) வளம்வீங்கிருக்கையாகிய (௮)

மென்பாலெனக் கூட்டுக.

மென்பால் - மருதம்.

(௩) பொறைய, நீ (௧) புலிகொன்று

களிறடூஉம் (௨) வயமான்

அனையை ; அதனால், (௪) வேந்தரும் வேளிரும் பிறரும் நின்னடிக்கீழ்ப்பணிந்து தமக்குரிய (௮) மென்பால்கடோறுமிருந்துமுன்பணிந்தவாற்றிற்கேற்ப (௫) நின்வழியொழுகாராயின், அவர்கள் (௧௧) வெள்வரகுழுதகொள்ளுடைக் கரம்பையாகிய (௮) வன்பாலிலே கெட்டுப்போயிருந்து ஆண்டுவிளைந்த வெள்வரகு உண்பதன்றித் தாம் பண்டுண்ணும் (௧௨) செந்நெல்வல்சி உண்ணக்கிடையாதபடி மிடிபடுகின்றார் ; (௧௩) தத்தநாட்டினை ஒருங்கு ஆளுதல் அவர்க்கு யாவணதென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௮. தழீஇயமென்பால். ௧௧. கல்லுடைக்கரம்பை.

(எசு.) களிறுடைப் பெருஞ்சமந் ததைய வெஃகுயர்த்
தொளிறுவாண் மன்னர் ததைநிலை கொன்று
முரசுகடிப் படைய வருந்துறை போகிப்
பெருங்கட னீந்திய மரம்வலி யுறுக்கும்
பண்ணிய விலைஞர் போலப் புண்ணொரீஇப்
பெருங்கைத் தொழுதியின் வன்றுயர் கழிப்பி
யிரந்தோர் வாழ நல்கி யிரப்போர்க்
கீத றண்டா மாசித றிருக்கை
கண்டனென் செல்கு வந்தனென் கால்கொண்டு
கருவி வானந் தண்டளி சொரிந்தெனப்
பல்விதை யுழவிற் சில்லே ராளர்
பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்
கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி





யிலங்குகதிர்த் திருமணி பெறூஉ
கடு மகன்கண் வைப்பி னாடுகிழ வோயே.

இதுவும் அது.

பெயர்-(அ) மாசிதறிருக்கை.

௬. கடல்நீந்தியமரம் - மரக்கலம்.

அ. மாசிதறிருக்கையென்றது பகைவரிடத்துக் கொள்ளப்பட்ட மாக்களை வரையாது அளவிறக்கக்கொடுக்கும் பாசறையிருக்கையென்றவாறு. இச்சிறப்பானே, இதற்கு 'மாசிதறிருக்கை' என்று பெயராயிற்று.

(௧௦) தண்டளிசொரிந்தன (௧௧) ஏராளர் (௧௬) கதிர்த்திருமணி பெறூஉம் (௧௫) நாடெனக்கூட்டி, மழைபெய்தலானே ஏராளர் உழுதுவிளைத்துக்கோடலேயன்றி உழுத இடங்கள்தோறும் ஒளியையுடைய திருமணிகளை எடுத்துக்கொள்ளுநாடென வுரைக்க.

௧௧. பல் விதை உழவின் சில்லேராளரென்றது பலவிதையுழவாற் பெரியராயிருப்பினும் தம் குலத்தானும்ஒழுக்கத்தானும் சிறிய ஏராளரென்றவாறு.

சின்மையை, சின்னாளென்றதுபோல ஈண்டுச்சிறுமையாகக்கொள்க.

(கஉ) பகன்றைத்தெரியல் (கரு) கழுவுறுகலிங்கம் கடுப்பச்சூடித் (கச) திருமணிபெறூஉமெனக் கூட்டி, பகன்றைமாலையைக் கழுவுறுகலிங்க மொப்பச் சூடிக்கொண்டுநின்று திருமணிகளை எடுக்குமெனவுரைக்க.

(கரு) நாடுகிழவோய், (உ) மன்னர் (க) பெருஞ்சமம் ததைய எஃ குயர்த்து (உ) அம்மன்னர்பலர் கூடிச்செறிந்த நிலைமையைக்கொன்று (ஙு) அருந்துறைபோகிச் (ச) கடலை நீந்தின மரக்கலத்தினை அழிவுசேராது வலி யுறுக்கும் (ரு) பண்டவாணிகரைப்போலக் (கூ) கைத்தொழிலின் (ரு) புண்ணை ஒருவுவித்து (கூ) வலியதுயரைக்கழித்துப் போரிட்டுத்துவினையிலிருத் தலை விநோதமாகக்கொண்டு (எ) இறந்தோர்வாழ்நலிகிப் பின்னும் இரப் போர்க்கு (அ) ஈதலின்மாறாத மாசிதறிருக்கையைக் (கூ) கண்டுபோவேன் வந்தேனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்பும் கொடைச்சிறப்பும் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ரு. பண்ணியவினைஞர். (கூ)

(எஎ.) எனைப்பெரும் படையனோ சினப்போர்ப் பொறைய
னென்றனி ராயி னாறுசெல் வம்பலிர்
மன்பதை பெயர வரசுகளத் தொழியக்
கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை

# எட்டாம் பத்து.

மீபிணத் துருண்ட தேயா வாழியிற்
பண்ணமை தேரு மாவு மாக்களு
மெண்ணற் கருமையி னெண்ணின்றே விலனே
கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி
யுகக்கும் பருந்தி னிலத்துநிழல் சாடிச்
சேண்பரன் முரம்பி னீர்ம்படைக் கொங்க
ராபரந் தன்ன செலவிற்பல
யானை காண்பலவன் றானை யானே

துறை - உழிஞையரவம்.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர்-(௪) வென்றடுதுணங்கை.

௩ .
மன்பதைபெயரவென்றது படைகெட்டோடவென்றவாறு.

௩ - ௪. அரசுகளத்தொழியக்
கொன்றென்றது அரசரைக் களத்

திலே உடலொழிந்துகிடக்கக் கொன்றென்றவாறு.

(ச) கொன்று தோளோச்சிய (ரு) பிணமெனக்கூட்டி, முன்பு தம்முடன்பகைத்தவரைக் கொன்று தோளோச்சியாடி இப்பொழுது இவன்களத்திற் பட்டுக்கிடக்கின்றவீரர்பிணமென அவ்வீரர்செய்தியை அவர்பிணத்தின்மேலேற்றிச் சொல்லியவாறுகவுரைக்க.

(ச) வென்றூடு துணங்கைப் (ரு) பிணமென்றது ஊர்களிலேயாடும் துணங்கையன்றிக் களங்களிலே வென்றாடின துணங்கையையுடைய பிணமென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'வென்றூடுதுணங்கை' என்று பெயராயிற்று.

ரு. மீபிணத்தைப் பிணமீயெனக்கொள்க.

எ. எண்ணிற்றோவென்னும் ஒற்று மெலிந்தது.

அ. கந்துகோளீயாதென்றது வினையெச்சவினைத்திரிசொல்.

கூ. சாடியென்னும் வினையெச்சத்தினைச் (கக) செலவென்னும் தொழிற்பெயரொடுமுடிக்க.

கO. ஏரம்படை..............................................................

(உ) வம்பவிர், (க) பொறையன் எனைப்பெரும்படையன் (உ) என்றனிராயின், (கஉ) அவன் தானையிடத்துத் (சு) தேரும் மாவும் மாக்களும் (எ) எண்ணற்கருமையின் எண்ணிற்றிலன்; ஆயின், (கஉ) அவன் தானையின் யானை தான் எண்ணினையோவெனின், அதுவும் எண்ணினேனல்லேன்; [கட்புலனுக்கு வரையலறப்பட்டதுபோல] (கக) ஆபரந்தாலொத்த செலவிற்

கரு.உ. பதிற்றுப் பத்து.

பல (கஉ) யானைவ்ய் அவ்வ்குனைய யானே செய்க.

இதனாற்சொல்லியது, அவன்படைப்பெருமைச்சிறப்புக் கூறியவா றாயிற்று.

இப்பாட்டிற் பொதுப்படப் படையெழுச்சிகூறியதனை உழிஞையுழ வமென்றது, ஆண்டு அப்படையெழுங்காலத்து நொச்சிமீதிற் போர்குறித் தெழுந்ததை ஒருகாரணத்தான் அறிந்துபோதும்.

(பி - ம்.) ரு. தெய்வயாழின்.

(எ) (எ௮.) வலம்படு முரசி னிலங்குவன விழூஉ
மவ்வெள் ளருவி யுவ்வரை யதுவே
சில்வளை விறலி செல்குவை யாயின்
வள்ளிதழ்த் தாமரை நெய்தலொ டரிந்து
ரு மெல்லியன் மகளி ரொல்குவன ரியலிக்
கிளிகடி மேவலர் புறவுதொறு நுவலப்
பல்பய னிலைஇய கடறுடை வைப்பின்
வெல்போ ராடவர் மறம்புரிந்து காக்கும்

வில்லடயி விறும்பிற் றகடேர் நூறி
பேஎ மன்ற பிறழ்நோக் கியவ
ரோடுறு கடுமுரண் மெய்ச் சென்று
வெம்முனை தபுத்த காலைத் தந்நாட்

டியாடுபரந் தன்ன மாவி
ஞபரந் தன்ன யானையோன் குன்றே.

துறை - விறலியாற்றுப்படை.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (கo) பிறழநோக்கியவர்.

உ. அவ்வெள்ளருவி - அழகிய வெள்ளருவி. உவ்வரையென்றது உவ்வெல்லையென்றவாறு. அதுவென்பது அம் மலையென்னுஞ்சுட்டு. வெள்ளருவியையுடைய அதுவெனக்கூட்டுக.

(ஙி) மகளிர் இயலி (ச) நெய்தலொடு தாமரையரிந்து (ரு) இளிகடி மேவலர் புறவுதொறும் நுவலப் (எ) பல்பயன் நிலைஇய கடறெனக்கூட்டி, இளிகடிமகளிர் நிலவணுமையானே மருதநிலத்திலேசென்று நெய்தலொடு தாமரையரிந்த பின் இளிகடிதொழிலை மேவுதலை யுடையாராய்ப் புறவின்புனங்

கடோறும் கிளிகடிபாடலுவலைப் பல்பயங்களும் நிலைபெற்ற முல்லைநிலமென வுரைக்க.

(௭) வைப்பிற் (௯) றகடூரெனக்கூட்டுக.

(௮) ஆடவர்காக்கும் (௯) இறும்பெனக்கூட்டுக.

௯. வில்பயிலிறும்பு - படைநிலை.

௧௦. பிறழநோக்கியவரென்றது தம்
சினமிகுதியானே மாற்றார் படைத்தோற்றத்தினை
நெறியால் நோக்காது எடுத்தும் படுத்தும் கோட்டி
யும் பலபடப் பிறழநோக்கும் பகைவராகிய
பல்லியமுடையரென்றவாறு.

இச்சிறப்பானே,

இதற்குப் 'பிறழநோக்கியவர்' என்றுபெயராயிற்று.

(௧௩) மாவிஞெடுவென ஓடு விரித்து, (௧௨)
முனைதபுத்தகாலை மாவி
ஞெடு (௧௪) ஆபரந்தன்ன யானையோனெனவுரைக்க.

(௫) சில்வளைவிறலி, செல்குவையாயின், (௧௪) யானையோன்குன்று (௨) உவ்வெல்லையில் வெள்ளருவியுடைய அதுவெனமாறிக்கூட்டி வினை முடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக்கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௪. இதட்டாமரை. ௧௦. பேயமன்ற.
௯. உறுப்பிற்றகடூர்.

(௮)

(எகூ.) உயிர்போற் றலையே செருவத் தானே
கொடைபோற் றலையே யிரவலர் நடுவட்
பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி
நின்வயிற் பிரிந்த நல்லிசை கனவினும்
பிறர்நசை யறியா வயங்குசெந் நாவிற்
படியோர்த் தேய்த்த வாண்மைத் தொடியோர்
தோளிடைக் குழைந்த கோதை மார்ப
வனைய வளப்பருங் குரையை யதனா
னின்னொடு வாரார் தந்நிலத் தொழிந்து
கொல்களிற் றியானை யெருத்தம் புல்லென
வில்குலை யறுத்துக் கோலின் வாரா
வெல்போர் வேந்தர் முரசுகண் போழ்ந்தவ
ரரசுவா வழைப்பக் கோடறுத் தியற்றிய
வணங்குடை மரபிற் கட்டின்மே லிருந்து
தும்பை சான்ற மெய்தயங் குயக்கத்து
நிறம்படு குருதி புறம்படி னல்லது

கஙச

## பதிற்றுப் பத்து.

மடையெதிர் கொள்ளா வஞ்சுவரு மரபிற்
கடவு ளயிரையி னிலைஇக்
கேடில வாக பெருமநின் புகழே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணமும் தூக்கும் அது.

# பெயர் - (கசு) நிறம்படு குருதி.

ச. பிரிந்த நின்வயின் நல்லிசையெனக் கூட்டுக.

பிரிதல் - தன்னைவிட்டுத் திக்குவிதிக்குக்களிலே போதல்.

(ச) இசை (ரு) அறியாவெனமுற்றாக அறுத்துரைக்க.

கூ. நின்னொவோரார் தந்நிலத்து ஒழிந்தென்றது நின்னைவழிபட்டு நின்னொடு ஒழுகாதிருத்தலேயன்றித் தந்நிலத்திலே வேறுபட்டுநின்றென்ற வாறு.

(கo) யானையெருத்தம்புல்லென (கக) வில்குலையறுத்துக் கோலின் வாரர் (கஉ) வேந்தரென்றது முன்பு நின்வழி ஒழுகாது ஒழிந்திருந்தவழிப் பின்பு தாம் களத்து நின்போர்வலிகண்டு இனி நின்வழி ஒழுகுதுமெனச் சொல்லித் தாம் ஏறிய யானையெருத்தம்புல்லென வில்லின் நாணியையறுத்து நின்செங்கோல்வழியொழுகாத வேந்தரென்றவாறு.

கரு. அழைத்தல் - வருத்தத்தாற் கதறுதல்.

(கரு) தும்பை சான்ற மெய் தயங்கு உயக்கத்து (கசு) நிறம்படு குருதியென்றது - வீரருடைய தும்பைசூடியதற்கேற்பநின்று பொருதலாற் றலையுடைய உடலானது அசையும்படிவந்த ஓய்வினையுடைய நிறங்களைத் திறந்துவிட்டகுருதியென்றவாறு.

அல்லாத இடங்களிற் குருதிகொள்ளாமையின், நிறங்களைத் திறக்க ஆண்டு உண்டாலகுருதியென்பதாயிற்று.

இச்சிறப்பானே, இதற்கு 'நிறம்படுகுருதி' என்று பெயராயிற்று.

(கஙு) கோட்டறுத்து இயற்றிய (கச) கட்டின்மேலிருந்து (கரு) நிறம்படுகுருதி புறம்படினல்லது (கஎ) மடைஎதிர்கொள்ளாக் (கஅ) கடவுளெனக்கூட்டி, அவ்வாறுசெய்ததொருகட்டில் கொடுவேந்திட்டதன்மேலிருந்து அவ்வாறுகொடுப்பதொரு பலியுண்டாயினல்லது பலிகொள்ளாக்கடவுளெனவுரைக்க.

(கச) கட்டின்மேலிருந்தல்லது (கரு) குருதிபுறம்படினல்லதென அல்லதென்பதனை இரண்டிடத்தும் கூட்டிக்கொள்க.

கஅ. கடவுளென்றது அவனால் இவ்வாறு வழிபடும் கொற்றவையை அமரர் - அக்கொற்றவைஉறைவதொருமலை.

## எட்டாம் பத்து கஙுரு

(எ) கோதைமார்ப, (க) செருவத்து உயிர்போற்றலை; (உ) இரவலர் நடுவண்கொடைபோற்றலை; (ஙு) பெரியோரைப்பேணிச் சிறியோரைஅளித்தி; (அ) அனையயின்குணங்கள் அளப்பரியை; நீ அவ்வாறொழுகுதலாற் (ச) பிரிந்த நின்வயின் நல்லிசை இனிக் கனவிலும் (ரு) பிறர் நச்சுதலறியார்; அவ்வாறு அறியாமையின், (கக) பெரும, அவ்வாறுகியபநின்புகழ் (கஅ) நிலைஇ நின்னிடத்துக் கேடிலவாகவென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

அ. 'அனையவளப்பருங்குரையை' என்றது (ஙு) 'சிறியோரையளித்தி' என்றதன்பின்னே நிற்கவேண்டுதலின், மாறாயிற்று,

இதனாற்சொல்லியது, அவன் பலகுணங்களும் வாழ்த்தியவாறாயிற்று.

ஒருங்கு புகழ்ந்து

(பி - ம்.) ச.

அ.

பிறந்த. க. வாரார்கின்னிலத்தெளிந்து.

அனையையளப். (க)

(௨௦.) வான்மருப்பிற் களிற்றியானை

மாமலையிற் கணங்கொண்டவ

ரெடுத்தெறிந்த விறன்முரசங்

கார்மழையிற் கடிதுமுழங்கச்

சாந்துபுலர்ந்த வியன்மார்பிற்
றொடிசுடர்வரும் வலிமுன்கைப்
புண்ணுடையெறுழ்த்தோட் புடையலங் கழற்காற்
பிறக்கடி யொதுங்காப் பூட்கை யொள்வா
ளொடிவி றெவ்வ ரெதிர்நின் றுரைஇ
யிடுக திறையே புரவெதிர்ந் தோற்கென
வம்புடை வலத்த ருயர்ந்தோர் பரவ
வனையை யாகன் மாறே பகைவர்
கால்கிளர்ந் தன்ன கதழ்பரிப் புரவிக்
கடும்பரி நெடுந்தேர் மீமிசை நுடங்குகொடி
புலவரைத் தோன்றல் யாவது சினப்போர்
நிலவரை நிறீஇய நல்லிசைத்
தொலையாக் கற்பநின் றெம்முனை யானே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - (எ) புண்ணுடையெறுழ்த்தோள்.

௨. கணங்கொள்ளவெனத் திரிக்க. அவரென்றது பகைவரை.

எ. புண்ணுடை எறுழ்த்தோளென்றது எப்பொழுதும் பொருது புண்ணாறாத வலியதோளென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்குப்;

'புண்ணுடையெறுழ்த்தோள்' என்று பெயராயிற்று.

௧0. புரவெதிர்ந்தோற்கென்றது
னுக்கென்றவாறு.
கொடையேற்றிருக்கின்ற அவ

(௧௪) கொடி (௧௫) தோன்றலென்றதனை

எழுவாயும் பயனிலையு மாகக்கொள்க.

(௧எ) நின் தெம்முனைப் (௧௫) புலவரையாரென மாறிக்கூட்டுக.

(௧எ) தொலையாக்கற்ப, (௧௧) நின்வீரராகிய உயர்ந்தோர் நின் தெவ்வராகிய (௨) அவருடைய (௧) களிற்றியானை (௨) மலையிற் கணங் கொள்ளாநிற்க, (௩) முரசம் (௪) கடிஅமுழங்காநிற்க, அவையிற்றை ஒன்றும் மதியாதே நின்னொடு (௯) ஒடிவில் தெவ்வராகிய அவர் எதிர்நின்று பெயரா (௧0) இப்புரவெதிர்ந்தோனுக்குத் திறையையிடுகவெனச் சொல்லி நின்னைப் (௧௧) பரவும்படி நீ (௧௨) அதற்கேற்ற தன்மையையுடையையான படியாலே (௧எ) நின்தெம்முனைப் (௧௫) புலவெல்லையில் நின் (௧௨) பகைவர் (௧௪) தேர்மிசைக்கொடி (௧௫) போரைக்குறித்துத்தோன்றல் யாவ

தெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன் கொடைச்சிறப்பொடுபடுத்து வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கஎ) தெம்முனைப் (கசு) புலவரைப் (கஉ) பகைவர் (கச) கொடி (கரு) தோன்றல் யாவதெவ னெதிரூன்றுவா ரின்மைதோன்றக் கூறிய அதனால், வஞ்சித்துறைப்பாட்டாணாயிற்று.

முன்னர் ஆறடியும் வஞ்சியடியாய் வந்தமையானே, வஞ்சித்தூக்கு மாயிற்று. (கo)

இதன் பதிகத்துக் கொல்லிக்கூற்றமென்றது, கொல்லிமலையைச் சூழ்ந்த மலைகளையுடைய நாட்டினை.

நீர்கூர்மீமிசையென்றது, அந்நாட்டு நீர்மிக்க மலையின் உச்சியை.

நொச்சிதந்தென்றது தகடூர் மதிலைக் கைக்கொண்டென்றவாறு.

## (பதிகம்.)

பொய்யில் செல்வக் கடுங்கோ வுக்கு
வேளாவிக்கோமான் பதுமன் றேவியீன்றமகன்
கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்

பல்வேற் றுனை யதிக மாறோ
டிருபெரு வேந்தரையு முடனிலை வென்று
முரசுங் குடையுங் கலனுங்கொண்
டுரைசால் சிறப்பி னடுகளம் வேட்டுத்
துகடீர் மகளி ரிரங்கத் துப்பறுத்துத்
தகடூ ரெறிந்து நொச்சிதந் தெய்திய

அருந்திற லொள்ளிசைப் பெருஞ்சேர

லிரும்பொறையை

மறுவில் வாய்மொழி யரிசில்கிழார் பாடினர் பத்துப்பாட்டு. அவைதாம்: குறுந்தாண்ஞாயில், உருத்தெழுவெள்ளம், நிறந்திகழ் பாசிழை, நலம்பெறு திருமணி, தீஞ்சேற்றியாணர், மாசிதறிருக்கை, வென்றுடுதுணங்கை, பிறழநோக்கியவர், நிறம்படுகுருதி, புண்ணுடை யெறுழ்த்தோள். இவைபாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: தானும் கோயிலாளும் புறம்போந்துநின்று கோயிலுள்ளவெல்லாம் கொண்மினென்று காணம் ஒன்பது நூறாயிரத்தொடு அரசுகட்டிற்கொடுப்ப அவர் யான் இரப்ப இதனை ஆள்கவென்று அமைச்சுப் பூண்டார்.

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை பதினேழியாண்டு வீற்றிருந்தான்.

எட்டாம் பத்து முற்றிற்று.

# ஒன்பதாம் பத்து.

(௮௧.) உலகம் புரக்கு முருகெழு சிரப்பின்
வண்ணக் கருவிய வளங்கெழு கமஞ்சூ
லகவிரு விசும்பி னதிர்சினஞ் சிறந்து
கடுஞ்சிலை கழறி விசும்படையூ நிவந்து
காலை யிசைக்கும் பொழுதொடு புலம்புகொளக்
களிறுபாய்ந் தியலக் கடுமா தாங்க
வொளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
வரசுபுறத் திறுப்பினு மதிர்விலர் திரிந்து
வாயில் கொள்ளா மைந்தினர் வயவர்

மாயிருங் கங்குலும் விழுத்தொடி சுடர்வரத்
தோள்பிணி மீகையர் புகல்சிறந்து நாளும்
முடிதல் வேட்கையர் நெடிய மொழியூஉக்
கெடாஅ நல்லிசைத் தங்குடி நிறுமா
றிடாஅ வேணி வியலறைக் கொட்ப
நாடடிப் படுத்தலிற் கொள்ளை மாற்றி
யழல்வினை யமைந்த நிழல்விடு கட்டி
கட்டளை வலிப்பநின் றானை யுதவி
வேறுபுலத் திறுத்த வெல்போ ரண்ணன்
முழவி னமைந்த பெரும்பழ மிசைந்து
சாறயர்ந் தன்ன காரணி யாணர்த்
தூம்பகம் பழுனிய தீம்பிழி மாந்திக்
காந்தளங் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்
கலிமகிழ் மேவல ரிரவலர்க் கீயுஞ்
சுரும்பார் சோலைப் பெரும்பெயற் கொல்லிப்
பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து
மின்னுமிழ்ந் தன்ன சுடரிழை யாயத்துத்
தன்னிறங் கரந்த வண்டுபடு துப்பி
னொடுங்கீ ரோதி யொண்ணுத லணிகொளக்
கொடுங்குழைக் கமர்த்த நோக்கி னயவரப்

# ஒன்பதாம் பத்து

கஙகூ

பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து
மாணிழை யரிவை காணிய வொருநாட்
பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்
முனைகை விட்டு முன்னிலைச் செல்லாது
தூவெதிர்ந்து பெறூஅத் தாவின் மள்ளரொடு
தொன்மருங் கறுத்த லஞ்சி யரண்கொண்டு
துஞ்சா வேந்தருந் துஞ்சுக
விருந்து மாக நின்பெருந் தேரே.

துறை - முல்லை.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

தூக்கு - செந்தூக்கு.

பெயர் - (ககூ) நிழல்விடுகட்டி.

௨. கமஞ்சூல் - மேகங்கள்; நிறைந்த சூலுடைமையின், மேகங்கள் கமஞ்சூலெனப்பட்டன.

௪. சிலையொடேழறியென ஒடு விரிக்க; சிலை - முழங்குதல். ஏழறல் - இடித்தல். நிவந்து விசும்பு அடையூவென மாறிக்கூட்டுக; விசும்படைதல் - மலையிலேபடிந்தவை எழுந்து விசும்பை அடைதல்.

௫. காலை இசைக்கும் பொழுதொடு புலம்புகொளவென்றது மேகங்கள் கார்காலத்தை அறிவிக்கின்ற பருவத்தானே வருத்தம் கொள்ளாநிற்கவென்றவாறு.

(௫) புலம்புகொள (௯) வயவர் (௧௪) வியலறைக்கொட்பவென முடிக்க.

௯. வாயில் கொள்ளா மைந்தினரென்றது தமக்குக் காவலைடைத்த இடங்களைச் சென்று கைக்கொள்ளா வலியினையுடையவரென்றவாறு.

ஈண்டு, வாயில் - இடம்.

௧௦. மா இருங்கங்குலென்றது மிகவும் கரிய இராவென்றவாறு.

(௧௦) கங்குலினும் (௧௪) கொட்பவென முடிக்க.

௧௧. தோள் பிணி மீ கையரென்றது குளிராலே தோளைப்பிணித்த அத்தோள்மீது உள்ளாகிய கைகளையுடையாரென்றவாறு.

௧௨. முடிதல்வேட்கையரென்றது தாம் எடுத்துக்கொண்ட போர் முடிதலிலே வேட்கையையுடையாரென்றவாறு.

௧௫. நாடு அடிப்படுத்தலிற் கொள்ளை மாற்றியென்றது நாட்டை அடிப்படுத்தினபடியாலே அடிப்படுத்தும் காலத்து உண்டாய்ச்சென்ற கொள்ளையை மாற்றியென்றவாறு.

## ௧௪௦ பதிற்றுப் பத்து.

௧௫. அழல்வினையமைதல் - ஓட்டறுதல்.

இவ்வடைச்சிறப்பானே, இதற்கு 'நிழல்விடுகட்டி' என்று பெயராயிற்று.

கஎ. கட்டளைவலித்தல் - இன்னார் இன்னதனைப்பெறுகவென்று தரங்களை நிச்சயித்தல். தானைக்குதவியென விரிக்க.

(உ௦) சாறு அயர்ந்தன்ன (உக) நீம்பிழியென முடித்து விழாக் கொண்டாடினாலொத்த இனிய மதுவெனவுரைக்க.

(உ௦) கர்ரணி யாணர்த் (உக) தூம்பன்றது கருமையைப்பொருந்தின அழகிய மூங்கிற்குழாயென்றவாறு.

உடு. பெருவாய்மலர் - இருவாட்சி. பசும்பிடி-பச்சிலை. மகிழ்ந்து-விரும்பிச்சூடியென்றவாறு.

உகூ. மின் உமிழ்ந்தன்ன சுடர் இழையென்றது மேகம் மின்களை உமிழ்ந்தாற்போன்ற சுடர்களையுடைய இழையென்றவாறு.

(௩௩) முனை கைவிட்டு முன்னிலைச்செல்லாது (௩௬) துஞ்சாவென முடித்து, நின்னோடு போர்செய்கையைக்கைவிட்டு நின்முன்னேவந்து வழிபட்டுநிற்றலைச் செய்யமாட்டாமையால் துஞ்சாதவெனவுரைக்க.

௩௪. தூ எதிர்ந்து பெறுஅத் தா இல் மள்ளரொடென்றது முன்பு நின்வலியோடெதிர்த்துப் பின் எதிர்க்கப்பெறாத வலியில்லாத மள்ளரொடென்றவாறு.

(௩௪) மள்ளரொடு (௩௬) துஞ்சாவெனமுடிக்க.

(கஅ) அண்ணல், (௩க) நின் அரிவைகாணிய (௩உ) நின்தேர் (௩க) ஒருநாட் (௩உ) புரவிபூண்பதாகவேண்டும்; அதுதான் நின் அரிவைக்கே உடலாகவேண்டுவதில்லை; அதனானே (௩௬) துஞ்சாவேந்தரும் துஞ்சுவார்களாகவேண்டும்; அதுதான் நின் (௩எ) பெருந்தோட்கு விருந்துமாகவேண்டும்; இவ்வாறு இரண்டொருகாரியமாக இதனைச் செய்கவென வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது, காமவேட்கையிற்செல்லாத அவன் வென்றிவேட்கைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

இஃது அவனரிவை கற்புமுல்லையைப்பற்றி வந்தமையால், துறை முல்லையாயிற்று.

(பி - ம்.) ௭. நுடங்கலு. ௩௨. புனைவினைநெடுந்தேர். ௨௨. காந்தட்கண்ணி. ௩௪. தூவின்மள்ளரொடு. ௨௭. வண்டுபடுகதுப்பின். (௯)

(௮௨.) பகைபெரு மைமயிற் றெய்வஞ் செப்ப
வாரிறை யஞ்சா வெருவரு கட்டூர்ப்

## ஒன்பதாம் பத்து.

க௪க

பல்கொடி நுடங்கு முன்பிற் செறுநர்
செல்சமந் தொலைத்த வினைநவில் யானை
கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
வண்டுபடு சென்னிய பிடிபுணர்ந் தியல
மறவர் மறல மாப்படை யுறுப்பத்
தேர்கொடி நுடங்கத் தோல்புடை யார்ப்பக்
காடுகை காய்த்திய நீடுநா ளிருக்கை
யின்ன வைகல் பன்னா ளாகப்

பாடிக் காண்கு வந்திசிற் பெரும
பாடுநர், கொளக்கொளக் குறையாச் செல்வத்துச் செற்றோர்
கொலக்கொலக் குறையாத் தானைச் சான்றோர்
வண்மையுஞ் செம்மையுஞ் சால்பு மறனும்
கரு புகன்றுபுகழ்ந் தசையா நல்லிசை
நிலந்தரு திருவி னெடியோய் நின்னே.

துறை - காட்சிவாழ்த்து.

வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (சு) வினைநவில்யானை.

க. பகை பெருமையின் தெய்வம் செப்பவென்றது நின் மனத்து அவரோடு பகைத்தன்மை பெரிதாகையானே நின்பகைவர் நின்னையஞ்சித் தாம்தாம் வழிபடும்தெய்வத்தைத் தத்தமக்குக் காவலென்றுசொல்லவென்றவாறு.

(க) செப்ப (உ) அஞ்சாவென முடிக்க.

உ. ஆர் இறை அஞ்சாக் கட்டுரேன்றது வீரர் அரிதாக இறுத்தலை யஞ்சாத பாசறையென்றவாறு.

(ரு) பல்கொடி நுடங்கும் (சு) யானையென முடிக்க.

சு. வினை நவில் யானையென்றது முன்பே போர்செய்துபழகின யானையென்றவாறு.

இச்சிறப்பானும், முன்னின்ற அடைச்சிறப்பானும் இதற்கு 'வினை நவில்யானை' என்று பெயராயிற்று.

(சு) பிடி புணர்ந்து இயலவென்றது (சு) அவ்வினை நவில்யானை (ரு) கடாம்வார்ந்து கடுஞ்சினம்பொத்தி அச்சினத்திற்கேற்பப் போர்பெருமையிற் பாகர் அதன்சினத்தை அளவுபடுத்தற்குப் பிடியைப்புணர்க்கையான், அப்பிடியொடுபுணர்ந்தும் போர்வேட்டுத் திரியவென்றவாறு.

## கசுஉ பதிற்றுப் பத்து.

எ. மாப் படை உறுப்பவென்றது இன்னபொழுது போர்நிகழுமென்று அறிநாமையின், குதிரைகள் கலனைகட்டி நிற்கவென்றவாறு.

மாவைப் படையுறுப்பவெனவிரித்தலுமாம்.

அ. தேர் கொடி நுடங்கவென்றது தேர் போர்குறித்துப் பண்ணிநின்று கொடிநுடங்கவென்றவாறு.

தோல் புடை ஆர்ப்பவென்றது தோல்களும் முன்சொன்னவற்றின் புடைகளிலே போர்குறித்த நாளிடத்து ஆர்ப்பவென்றவாறு.

(சு) இயல (எ) மாவுறுப்ப (அ) நுடங்க ஆர்ப்பவென்னும் ஈற்றினையும் (க0) பன்னாளாகவென்னும் வினையொடுமுடிக்க.

கூ. காடு கைகாய்த்தியவென்றது பாசறையிருக்கின்ற நாள் குளிர்நாளாகையால், விறகெல்லாமுறித்துத் தீக்காய்ந்தவென்றவாறு.

காட்டையென இரண்டாவதனைவிரித்து அதனைக் காய்த்தியவென்பதனுட் போந்த பொருண்மையொடு முடிக்க.

கூ-க0. நீடுநாளிருக்கையையுடைய இன்னவைகலென இரண்டாவது விரிக்க.

க0. இன்னவைகலென்றது இப்பெற்றியையுடைய பாசறையிருக்கின்ற நாட்களென்றவாறு.

கஉ-ரு. செற்றோர் கொலக் கொலக் குறையாத் தானையென்றது பகைவர் போருட் கொல்லக்கொல்லக் குறைபடாத தானையென்று அதன் பெருமைகூறியவாறு.

கடு. புகன்று புகழ்ந்தென்பதனைப் புகன்றுபுகழவெனத் திரிக்க. அசையாநல்லிசை - கெடாநல்லிசை.

புகழ்க்காரணமாகிய (கச) வண்மைமுதலியகுணங்களைச் (கரு) சான்றோர் (கடு) புகன்றுபுகழ்கையாலே கெடாதுநின்ற நல்லபுகழெனக் கொள்க.

(கசு) நெடியோய், (கக) பெரும, (உ)கட்டூரிடத்தே (ரு) நீடோளிருக்கை (கo) இன்னவைகல்தான் பன்னாளானபடியாலே (கசு) நின்னைப் (கக) பாடிக் காண்குவந்தேனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ரு. முன்பிற்செல்வர். (உ)

(அ௲.) கார்மழை முன்பிற் கைபரிந் தெழுதரும்
வான்பறைக் குருகி னெடுவரி பொற்பக்
கொல்களிறு மிடைந்த பஃறோற் றொழுதியொடு
நெடுந்தேர் நுடங்குகொடி யவிர்வரப் பொலிந்து
ரு செலவுபெரி தினிதுநிற் காணு மோர்க்கே

# ஒன்பதாம் பத்து.

கசா௫

யின்ஞ தம்மவது தானே பன்மா
நாடுகெட வெருக்கி நன்கலந் தருஉநின்
போரருங் கடுஞ்சின மெதிர்ந்து
மாறுகொள் வேந்தர் பாசறை யோர்க்கே.

துறை - தும்பையரவம்.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

தூக்கு - செந்தூக்கு.

பெயர் - (ங) பஃறேற்றெழுதி.

க. கைபரிதல் - ஒழுங்குகுலைதல்.

மழைக்கு ஒப்பாகியயானைகளோடு (ங) தோல்களையும் ஒப்பித்துப் பெரியவாகக் கூறியசிறப்பான், இதற்கு, 'பஃறேற்றெழுதி' என்று பெயராயிற்று.

சா. பன்மாவென்றது பலபடியென்றவாறு.

எ. எருக்கல் - அழித்தல்.

(௫) நின்னைக்காண்பார்க்கு நின்படைசெல்கின்றசெலவு (௧) மழைக் குழாத்தின்முன்பே ஓரொருகால் ஒழுங்கு குலைந்துசெல்லும் கொக்கொழு ங்குபோலக் (௩) களிறுமிடைந்த பஃறோற்கிடுகின் தொகுதியொடு (௪)தேர் களின் நுடங்குகொடி விளங்காநிற்பப் பொலிவுபெற்றுப் (௫) பெருக இனிது; அவ்வாறு அன்புறுவாரையொழிய (௬) அதுதான் இன்னாது,யார்க் கெனின், (௯) மாறுகொள்வேந்தர் பாசறையோர்க்கென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்படைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௨. போர்ப்ப. ௬-௭. பன்மா, ஞடு.
௬. அம்மதானே.

(௩)

(௪௪.) எடுத்தே றேய கடிப்புடை யதிரும்
போர்ப்புறு முரசங் கண்ணதிர்ந் தாங்குக்
கார்மழை முழக்கினும் வெளில்பிணி நீவி
நுதலணந் தெழுதருந் தொழினவில் யானைப்
பார்வற் பாசறைத் தரூஉம் பல்வேற்
பூழியர் கோவே பொலந்தேர்ப் பொறைய
மன்பதை சவட்டுங் கூற்ற முன்ப
கொடிநுடங் காரெயி லெண்ணுவரம் பறியா
பன்மா பரந்தபுல மொன்றெண் றெண்ணாது
ணவியை யாதனற் கறிந்தன ராயினும்



வார்முகின் முழக்கின் மழகளிறு மிகீஇத்தன்
கான்முளை மூங்கிற் கவர்கிளை போல
வுய்தல்யா வதுநின் னுடற்றி யோரே

வணங்க லறியா ருடன்றெழுந் துரைஇப்
கடு போர்ப்புறு தண்ணுமை
யார்ப்பெழுந்து நுவல
நோய்த்தொழின் மலைந்த வேலீண்
டுழுவத்து
முனைபுகல் புகல்வின் மாறா மைந்தரொ
டுருமெறி வரையிற் களிறுநிலஞ் சேரக்
காஞ்சி சான்ற செருப்பல செய்துநின்
குவவுக்குரை யிருக்கை யினிதுகண்
டிகுமே
காலை மாரி பெய்துதொழி லாற்றி
விண்டு முன்னிய புயனெடுங் காலைக்
கல்சேர்பு மாமழை தலைஇப்
பல்குரற் புள்ளி னொலியெழுந் தாங்கே.

துறை - வாகை.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (சு) தொழினவில்யானை.

(க) எடுத்தேறு ஏவிய (உ) முரசமென முடிக்க.

(க) கடிப்பென்பது கடியெனக் கடைக்குறைந்தது. புடையானென உருபுவிரிக்க.

ந. முழக்கினுமென்ற உம்மை முரசினது கண்ணின் அதிர்ச்சியிலேயன்றி அதனொடொத்த மழைமுழக்கினுமென * எச்சவும்மை.

ச. தொழில் நவில் யானையென்றது போர்க்குரியயானையென்று எல்லாராலும் சொல்லப்படுகின்ற யானையென்றவாறு.

இச்சிறப்பானும், முன்னின்ற அடைச்சிறப்பானும் இதற்கு, 'தொழி னவில்யானை' என்று பெயராயிற்று.

(ரு) பார்வற்பாசறை (ச) யானை (ரு) தருஉமென மாறிக்கூட்டி மாற்றாருடைய காவற்பாசறையிற் புக்கு அவ் யானைகளைக் கொண்டுபோது மென்றவாறு.

எ. சவட்டுதல் - உருவழித்தல்.

கூ. பரந்தனவென்பது பரந்தவெனநின்றது.

கஉ. கவர்தல் - அகப்படுத்தல்.

---

* சிறப்பும்மையென்றும் பிரதிபேதமுண்டு.

## ஒன்பதாம் பத்து. 

(கஉ) மூளை மூங்கிற் (கக) களிறு (கஉ)

கால் கவர் இளைபோல

(கங) நின் உடற்றியோர் உய்தல்யாவதென மாறிக்கூட்டி, மூளையானமூங்கிலிற் களிறு காலால் அகப்படுத்தப்பட்டகிளை உய்யாதன்றே; அஃது அழிந்தாற்போல நின்னை உடற்றியோர் உய்தல் கூடாதெனவுரைக்க.

கரு. நுவலவென்றது படையையுற்றுப்

போர்செய்கவென்று சொல்லவென்றவாறு.

கசு. நோய்த் தொழில் மலைந்தவென்றது

நோய்த்தொழிலாகிய போரை

ஏறட்டுக்கொண்டவென்றவாறு.

வேலீண்டழுவமென்றது,

மாற்றார்படைப்பரப்பினை.

கக. காஞ்சிசான்றவென்றது

நிலையாமையமைந்தவென்றவாறு.

உ௦. குவவு - படைக்குழாம். குரைத்தல் - ஆரவாரித்தல்.

(கக) செருப்பலசெய்து (உ௦) குரைத்தவெனமுடிக்க.

உக. காலமாரியென்றது மாரியிற்பெய்யும் பெயலினை.

தொழிலாற்றியென்றது உழவுத்தொழின்முதலாய தொழில்களைச செய்வித்தென்றவாறு.

(உந) கல்சேர்பு மாமழை தலைஇயென்றது, (உக) பண்டு ஒருகாலம் பெய்து ஆற்றி (உஉ) வரைக்கட்போயினபுயல் , நெடுங்காலம்பெய்யாத நிலைமைக்கண்ணே பின்பு பெய்வதாகக் கல்லைச்சேர்ந்து மழைபெய்யவென்றவாறு.

தலைஇயென்பதனைத் தலையவெனத்திரிக்க.

(சு) பூழியர்கோவே, பொறைய, (எ) முன்ப, (கூ) பகைப்புலத்து (அ) ஆரெயில்கள் எண்ணுவரம்பறியா; (கூ) பன்மா பரந்தன; ஆகையால், பகைப்புலம் நமக்குவெலற்குஅரியதொன்றென்று எண்ணாது (கo) நீ ஆண்டு வல்லுநையானபடியை முன்பு அறியாது (கஉ) நின்னை உடற்றியோர் இன்று போர்செய்துஅதனை (கo) அறிந்தாராயினும் அவர் நின்னொடு (கச) உடன்று எழுந்து உரைஇ அதனையே பின்னும் அறிவதல்லது நின்னை வணங்கல் அறிகின்றிலர்; இனி அவர் (கஉ) முளைமுங்கிலிற் கால்கவர்கிளைபோல அழிவதல்லது (கரு) உய்யவுங்கருதுவது யாவது? (உஉ) நெடுங்காலம்பெய்யாத (உரு) மழை பெய்தவழிப் (உச) பலகுரலையுடைய புள்ளின் ஒலியெழுந்தாற்போல, நெடுங்காலம் போர்செய்யாதுநின்று (கஉ) அவ்வுடற்றியோர் (கசு) வேலீண்டு அழுவத்துச் (கக) சான்ற செருப்பலசெய்து நின் (உo) பல படைக்குழாம் ஆரவாரிக்கின்றஇருப்பினை யாம் இனிதுகண்டேமென மாறிக்கூட்டிவினைமுடிவுசெய்க.

(கச) 'உடன்றெழுந் துரைஇ வணங்க லறியார்' என்பது (கo) 'அறிந்தனராயினும்' என்பதன்பின் நிற்கவேண்டுதலின், மாறாயிற்று.

19

## கூசகூ பதிற்றுப் பத்து.

இதனாற்சொல்லியது,

அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) கூ. புலமென்றெண்ணது.

(ச) (அரு.) நன்மரந் துவன்றிய நாடுபல தரீஇப்
பொன்னவிர் புனைசெய
லிலங்கும் பெரும்பூ

ஞென்றுப் பூட்கைச்
சென்னியர் பெருமா
னிட்ட வெள்வேன்
மூத்தைத் தம்மென
மூன்றிணை முதல்வர் போல நின்று
தீஞ்சுளை நிலேஇய திருமா மருங்கிற்
கோடுபல விரிந்த நாடுகா ணெடுவரைச்
சூடா நறவி ஞண்மகி ழிருக்கை
யரசவை பணிய வறம்புரிந்து வயங்கிய
மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவி
னுவலே கூராக் கவலேயி னெஞ்சி
னனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன் பெற்ற வூரினும் பலவே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணமுந் தூக்கும் அது.

பெயர் - (எ) நாடுகாணெடுவரை.

ரு. ஒன்றுப் பூட்கை - பிறர்க்கு அப்படிச்செய்யப் பொருந்தாத மேற்கோள். சென்னியர்பெருமானேயென்பதனுள், இரண்டாவது விகாரத்தாற் ருெக்கது.

௪. முத்தைத் தம்மென - முன்னே தம்மினென.

முந்தை, முத்தையென வலித்தது.

(ரு) முதல்வர்போல (கூ) அறம்புரிந்துவயங்கியவென முடிக்க.

கூ - ௧௦. அறம்புரிந்துவயங்கிய கொள்கையென்றது மறம்புரியென்றது, அறத்திற்கு இடையீடுபடவருவழி அதனைக்காத்தற்கு அவ்வறக்கொள்கை மறத்தொடு பொருந்துமென்றற்கு.

எ. நாடுகாண் நெடுவரையென்றது தன்மேலேறி நாட்டைக்கண்டு இன்புறுதற்கு ஏதுவாகிய ஓக்கமுடைய மலையென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'நாடுகாணெடுவரை' என்றுபெயராயிற்று.

அ. சூடாநறவு, மதுவிற்கு வெளிப்படை.

(௧௦) கொள்கையைப் (௧௨) பாடியவென இரண்டாவது விரித்து முடிக்க.

## ஒன்பதாம் பத்து. ௧௪௭

(௧௨) நாவிற்பாடியவென்றது (௧௦) வயங்கிய செந்நாவினனும் (௧௧) உவலைகூராக் கவலையில் நெஞ்சினனும் மெய்ம்மையாற்பாடிய வென்றவாறு.

*(௧௩) கபிலனென்ற தெர்டைக்கேற்ப (௧௨) நவிலப்பாடியவென்பதூஉம் பாடம்.

இளஞ்சேரலிரும்பொறை (ரு) சென்னியர்பெருமானுடைய (க) நாடுகள்பலவற்றையும் எமக்குக் கொண்டுதந்து (ரு) அச்சென்னியர்பெருமானை (ச) எம்முன்னே பிடித்துக்கொண்டுவந்து தம்பினெனத் தம்படைத்தலைவரை ஏவச் சென்னியர்பெருமான் படையாளர் பொருதுதோற்றுப் (ச)போகட்ட வெள்வேல் செல்வக்கடுங்கோவாழியாதனென்பவன் (எ) நாடுகாணெடு வரையின் (அ) நாண்மகிழிருக்கைக்கண்ணே (௫) தன்முன்றிணை முதல்வரைப் போல (கூ) அரசவைபணிய அறம்புரிந்துவயங்கிய (க0) மறம்புரிகொள்கையைப் (கஉ) பாடின (கரு) கபிலன்பெற்றவூரினும் பலவென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

சென்னியர்பெருமானைத் தம்மென மாறவேண்டுதலின், மாறுயிற்று. இனிப் பிறவாறு மாறிப் பொருளுரைப்பாருமுளர்.

இதனாற்சொல்லியது; அவன் முன்னோருடைய கொடைச்சிறப்பொடுபடுத்து அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறுயிற்று. (௫)

(அசூ.) உறலுறு குருதிச் செருக்களம் புலவக்

கொன்றமர்க் கடந்த வெந்திறற் றடக்கை
வென்வேற் பொறைய னென்றலின் வெருவர
வெப்புடை யாடூஉச் செத்தனென் மன்யா

௫ னல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்
தில்லோர் புன்கண் டீர நல்கு

நாடல் சான்ற நயனுடை நெஞ்சிற்
பாடுநர் புரவல னாடுநடை யண்ணல்
கழைநிலை பெறாஅக் குட்டத் தாயினும்
புனல்பாய் மகளி ராட வொழிந்த
பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றுஞ்
சாந்துவரு வானி நீரினுந்
தீந்தண் சாயலன் மன்ற தானே.

இதுவுமது.

பெயர் - (உ) வெந்திறற்றடக்கை.



க. உறலுறுகுருதியென்றது நிலத்திலே உறுதல் மிக்க குருதி யென்றவாறு.

(க) 'உறலுறு' என்பதுமுதலாக முன்னின்ற அடைச்சிறப்பான் இதற்கு (உ) 'வெந்திறற்றடக்கை' என்று

பெயராயிற்று.

ரு. நிலை இயவென்றது ஈண்டு வினையெச்சம்.

கஉ. வருவானியென்றது வினைத்தொகை. வானியென்பது ஓர் யாறு.

இளஞ்சேரலிரும்பொறையை எல்லாரும் (ந) வெருவரச் (க) செருக்களம்புலவக் (உ) கொன்றமர்க்கடந்த தடக்கைப் (ந) பொறையனென்று சொல்லுகையாலே, (ச) யான் அவனை வெப்பமுடையானொருமகனென்று முன் புகருதினேன்; அஃது இப்பொழுது கழிந்தது; அப்பொறையனாகிய (அ) பாடுநர்புரவலன், ஆடுநடையண்ணல் யான் தன்னொடு கலந்திருந்தவழித் தன்னாட்டு (கஉ) வானியென்னும் யாற்றுநீரினும் (கந) சாயலனாயிருந்தானொருவனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் வன்மைமென்மைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) உ. அமர்கடந்த.

(௮௭.) சென்மோ பாடினி நன்கலம்
பெறுகுவை
சந்தம் பூழிலொடு பொங்குநுரை சுமந்து
தெண்கடன் முன்னிய வெண்டலைச் செம்புன
லொய்யு நீர்வழிக் கரும்பினும்
பல்வேற் பொறையன் வல்லனு ளலியே.

துறை - விறலியாற்றுப்படை.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (௩) வெண்டலைச் செம்புனல்.

௨. பூழில் - அகில்.
௩. முன்னியவென்றது ஈண்டுப் பெயரெச்சம்.
௩. வெண்டலைச் செம்புனலென முரண்படக்கூறியவாற்றானும் முன்னின்ற அடைச்சிறப்பானும் இதற்கு, 'வெண்டலைச்செம்புனல்' என்று பெயராயிற்று.
செம்புனலென்றது செம்புனலையுடைய யாற்றினை.
௪. நீர்வழிஒய்யும் கரும்பெனக்கூட்டி நீரிடத்துச்செலுத்துங்கரும்பென்க.
கரும்பென்றது கருப்பந்தெப்பத்தினை.

வெண்டலைச்செம்புனலையுடைய

யாற்றிற் (ச) செலுத்தும் கருப்பம்புணையினும் (ரு)

அளித்தல்வல்லன்; ஆத

லால், அவன்பாலே (க) பாடினி, செல்; செல்லின்,

யெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

நன்கலம் பெறுகுவை

இதனாற் சொல்லியது, அவன் அருட்சிறப்புக்

கூறியவாறாயிற்று. (உஉ.) வையக மலர்ந்த

தொழின்முறை யொழியாது

கடவுட் பெயரிய கானமொடு கல்லுயர்ந்து

தெண்கடல் வளைஇய மலர்தலை யுலகத்துத்

தம்பெயர் போகிய வொன்னார் தேயத்

(ரு) துளங்கிருங் குட்டந் தொலைய வேலிட்

டணங்குடைக் கடம்பின் முழுமுத றடிந்து

பொருமுர ணெய்திய கழுவுள் புறம்பெற்று

நாமம் மன்னர் துணிய நூறிக்

கால்வல் புரவி யண்ட ரோட்டிச்

சுடர்வீ வாகை நன்னற் றேய்த்துக்
குருதி விதிர்த்த குவவுச்சோற்றுக் குன்றோ
டுருகெழு மரபி னயிரை பரைஇ
வேந்தரும் வேளிரும் பின்வந்து பணியக்
கொற்ற மெய்திய பெரியோர் மருக
வியனுளை யரிமான் மறங்கெழு குருசில்
விரவுப்பணை முழங்கு நிரைதோல் வரைப்பி
னுரவுக்களிற்று வெல்கொடி நுடங்கும்பாசறை
யாரெயி லவித்த கல்கால் கவணை
நாரரி நறவிற் கொங்கர் கோவே
யுடலுநர்த் தபுத்த பொலந்தேர்க் குருசில்
வளைகடன் முழவிற் றொண்டியோர் பொருந
நீயே வாழிய பெரும நின்வயிற்
றுவைத்த தும்பை நனவுற்று வினவு
மாற்றருந் தெய்வத்துக் கூட்ட முன்னிய
புனன்மலி பேரியா றிழிதந் தாங்கு
வருநர் வரையாச் செழும்பஃ றாரங்
கொளக்கொளக் குறையாது தலைத்தலைச் சிறப்ப

வோவத் தன்ன வுருகெழு நெடுநகர்ப்
பாவை யன்ன மகளிர் நாப்பட்
புகன்ற மாண்பொறிப் பொலிந்த சாந்தமொடு
தண்கமழ் கோதை சூடிப் பூண்சுமந்து
திருவிற் குலஇத் திருமணி புரையு
முருகெழு கருவிய பெருமழை சேர்ந்து
வேங்கை விரிந்து விசும்புறு சேட்சிமை
யருவி யருவரை யன்ன மார்பிற்
சேணுறு நல்லிசைச் சேயிழை கணவ
மாகஞ் சுடர மாவிசும் புகக்கு
ஞாயிறு போல விளங்குதி பன்னா
ளீங்குக் காண்கு வந்தனென் யானே
யுறுகா லெடுத்த வோங்குவரற் புணரி
நுண்மண லடைகரை யுடைதருந்
தண்கடற் படப்பை நாடுகிழ வோயே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணமும் தூக்கும் அது.

## பெயர் - (கஅ) கல்கால்கவணை.

க. வையகம் மலர்ந்த தொழிலென்றது வையகத்திற்பரந்த அரசர் தொழிலென்றவாறு.

(க) தொழின்முறைநழியாது(கச)கொற்றமெய்தியவென முடிக்க.

உ. கடவுட் பெயரிய கானமென்றது, விந்தாடவியை. கடவுளென்றது, ஆண்டு உறையும் கொற்றவையினை. கடவுளினென விரிக்க. கல்லுயரவெனத் திரிக்க.

கஉ. அயிரையென்றது, அயிரைமலையுறையும் கொற்றவையினை.

கஅ. கல்கால்கவணையென்றது கற்களைக் கான்றாற்போல இடையறாமல்விடும் கவணென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு, 'கல்கால்கவணை' என்று பெயராயிற்று.

உங. துவைத்ததம்பையென்றது எல்லாராலும் புகழ்ந்துசொல்லப்பட்ட தும்பைப்போரென்றவாறு.

(உங) நனவுற்றுவினவும் (உச) தெய்வமென்றது அத்தும்பைப் போரை நினக்கு வென்றிதருதற்கு மெய்ம்மையுற்றுவினவும் கொற்றவையென்றவாறு.

## ஒன்பதாம் பத்து. கருக

(உச) தெய்வத்துக் கூட்டமுன்னிய (உரு) யாறென்றது அத்தெய்வம் கூடியுறைதலையுடைய பட்டயாறென்றவாறு.

அயிரைமலையைத் தலையாகக்கொண்டு ஒழுகப்

தெய்வம் கூடியுறைதலையுடைய

அயிரை தெய்வத்துக் கூட்டமெனப்

படாது.

௨௫. இழிதந்தாங்கென்றது அவ்வியாறு மலையினின்று இழிந்தாற் போலவென்றவாறு.

(௨௭) சிறப்ப (௩௮) விளங்குதியென முடிக்க.

௩௦. பொறியென்றது உத்தம இலக்கணங்களை. பொறியொடு சாந்தமொடுவென ஒடுவை இரண்டற்கும் கூட்டியுரைக்க. ஒடு, வேறுவினையொடு.

௩௧. கோதையென்றது, முத்தாரத்தினை.

(௩௧) சூடிச் சுமந்தென்னும் வினையெச்சங்களை (௩௫) வரையன்ன

வென்பதனுள், அன்னவென்பதனொடு முடிக்க,

(௩௨) விற்குலைஇ (௩௪) வேங்கை விரிந்தென்னும்வினையெச்சங்களைத் திரித்து வில்குலவ வேங்கைவிரியத் (௩௨) திருமணிபுரையும் (௩௩) உருகெழுகருவிய பெருமழைசேர்ந்து (௩௪) விசும்புறு சேட்சிமை (௩௫)

அருவியருவரையென மாறிக்கூட்டி, இதனைக் குறைவுநிலையுவமையில் வழுவமைதியாக்கிப் பொறிக்கு வேங்கைப்பூஉவமமாகவும் கோதைக்குத் திருவில் உவமமாகவும் பூணிற்கு அருவி உவமமாகவும் சாந்திற்கு உவமமில்லையாகவுமுரைக்க. இவ்வாறு இடர்ப்படாது வாளாதுமலையையுரைப்பினும் அமையும்.

௩௮. விளங்குதியென்பது ஈண்டு முன்னிலையேவல்.

௪0. உறுகால் எடுத்த புணரியெனக்கூட்டுக.

(கச) பெரியோர் மருக, (கரு) மறங்கெழுகுருசில், (ககூ) கொங்கர் கோவே, (உo) பொலந்தேர்க்குருசில், (உக) தொண்டியோர்பொருந, (உஉ) பெரும், (௩௬) சேயிழைகணவ, (௪உ) நாடுகிழவோய், (௩கூ) ஈங்குநிற்காண்கு வந்தேன்; (உஉ) நீ நீடுவாழ்வாயாக, (உகு) பலதாரம் (உஎ) கொளக் கொளக்குறைபடாமற் சிறப்ப (உகூ) மகளிர்காப்பட. (௩௮) பன்னாள் ஞாயிறு போல விளங்குவாயெனமாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன் கொடைச்சிறப்பும் காமவின்பச்சிறப்பும் உடன்கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(பி - ம்.) ௨எ. சிறந்து. (அ)

(அகூ) வானம் பொழுதொடு சுரப்பக் கானந்
தோடுறு மடமா னேறுபுணர்ந் தியலப்
புள்ளு மிஞிறு மாச்சினை யார்ப்பப்



பழனுங் கிழங்கு மிசையற வறியாது
பல்லா னன்னிரை புல்லருந் துகளப்
பயங்கடை யறியா வளங்கெழு சிறப்பிற்
பெரும்பல் யாணர்க் கூலங் கெழும
நன்பல் லூழி நடுவுநின் றொழுகப்
பல்வே லிரும்பொறை நின்கோல்
செம்மையி

ஞளி ஞளி ஞடுதொழு தேத்த
வுயர்நிலை யுலகத் துயர்ந்தோர் பரவ
வரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நோயிலை யாகியர் நீயே நின்மாட்
டடங்கிய நெஞ்சம் புகர்படு பறியாது
கனவினும் பிரியா வுறையுளொடு
தண்ணெனத் தகர நீவிய துவராக் கூந்தல்
வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து
வாழ்நா ளறியும் வயங்குசுடர் நோக்கத்து
மீனொடு புரையுங் கற்பின்
வாணுத லரிவையொடு காண்வரப் பொலிந்தே.

துறை - காவன்முல்லை.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (கரு) துவராக்கூந்தல்.

ச. மிசை அறவு அறியர்மலெனத் திரிக்க,

அ. நடுவென்றது, நடுவுநிலைமையை.

கஉ. பிழையாமலெனத் திரிக்க.

கசு. துவராக்கூந்தலென்றது எப்பொழுதும் தகரமுதலியன நீவு கையால் ஈரம் புலராத கூந்தலென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு, 'துவராக்கூந்தல்' என்று பெயராயிற்று.

(கரு) உறையுளொடு (கச) நெஞ்சம் புகர்படுபு அறியாதெனமாறிக் கூட்டி அறியாதென்பதனை அறியாமலெனத்திரித்து அதனைப் (கக) புரையு மென்றதனொடு முடிக்க.

உறையுளொடு மீனெடுவென நின்ற ஒடுக்கள் வேறுவினையொடு.

(கூ) பல்வேலிரும்பொறை, நின்கோல் செம்மையாலே, (க) வானம் சுரப்பக் கானம் (உ) ஏறு புணர்ந்து இயலச் (ங) சினையிற் புள்ளும் மிஞிறும் ஆர்ப்ப (ச) பழனும் கிழங்கும் மிசையறவறியாதொழிய (ரு) ஆனிரை புல்



லருந்துகளக் (எ) கூலம் கெழும (அ) ஊழி நடுவுநின்று ஒழுக (கo) நாடு தொழுதேத்த (கக) உயர்நிலையுலகத்து உயர்ந்தோர் பரவ (கஉ) அரசியல் பிழையாதொழியச் செருவில் மேம்பட்டுத் தோன்றி (கங) நீ (உo) நின் அறிவையோடுபொலிந்து (கங) நோயிலையாகியரெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது, அவன் நாடுகாவற்சிறப்புக்கூறி வாழ்த்திய வாறாயிற்று.

அவ்வாறு நாடுகாவல்கூறினமையால், துறை காவன்முல்லையாயிற்று.

கஅ. வாழுநாள். (கூ)

(கூ0.) மீன்வயி னிற்ப வானம் வாய்ப்ப
வச்சற் றேம மாகி யிருடீர்ந்
தின்பம் பெருகத் தோன்றித் தந்துணைத்
துறையி னெஞ்சாமை நிறையக் கற்றுக்
கழிந்தோ ருடற்றுங் கடுந்தூ வஞ்சா

வொளிறுவாள் வயவேந்தர்
களிறொடு கலந்தந்து
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப

வகல்வையத்துப் பகலாற்றி
மாயாப் பல்புகழ் வியல்விசும் பூர்தர
வாள்வலி யுறுத்துச் செம்மை பூஉண்
டறன்வாழ்த்த நற்காண்ட
விறன்மாந்தரன் விறன்மருக

வீர முடைமையி னீரோ ரனையை
யளப்பரு மையி னிருவிசும் பனையை
கொளக்குறை படாமையின் முந்நீ ரனையை
பன்மீ னாப்பட் டிங்கள் போலப்
பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை
யுருகெழு மரபி னயிரை பரவியுங்
கடலிகுப்ப வேலிட்டு
முடலுநர் மிடல்சாய்த்து
மலையவு நிலத்தவு மருப்பம் வெளவிப்
20



பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய
கொற்றத் திருவி னுரவோ ரும்பல்
கட்டிப் புழுக்கிற் கொங்கர் கோவே
மட்டப் புகாவிற் குட்டுவ ரேறே

யெழாஅத் துணைத்தோட் பூழியர் மெய்ம்மறை
யிலங்குநீர்ப் பரப்பின் மரந்தையோர் பொருந
வெண்பூ வேளையொடு சுரைதலை மயக்கிய
விரவுமொழிக் கட்டூர் வயவர் வேந்தே
யுரவுக்கட லன்ன தாங்கருந் தானையொடு
மாண்வினைச் சாப மார்புற வாங்கி

ஞாண்பொர விளங்கிய வலிகெழு தடக்கை
வார்ந்துபுனைந் தன்ன வேந்துகுவவு மொய்ம்பின்
மீன்பூத் தன்ன விளங்குமணிப் பாண்டி
லாய்மயிர்க் கவரிப் பாய்மா மேல்கொண்டு

காழெஃகம் பிடித்தெறிந்து
விழுமத்திற் புகலும் பெயரா வாண்மைக்
காஞ்சி சான்ற வயவர் பெரும
வீங்குபெருஞ் சிறப்பி னோங்குபுக ழோயே
கழனி யுழவர் தண்ணுமை யிசைப்பிற்

பழன மஞ்ஞை மழைசெத் தாலுந்
தண்புன லாடுந ரார்ப்பொடு மயங்கி
வெம்போர் மள்ளர் தெண்கிணை கறங்கக்
கூழுடை நல்லி லேறுமாறு சிலைப்பச்
செழும்பல விருந்த கொழும்பஃ றண்பணைக்
காவிரிப் படப்பை நன்னா டன்ன
வளங்கெழு குடைச்சூ லடங்கிய கொள்கை
யாறிய கற்பிற் றேறிய நல்லிசை
வண்டார் கூந்த லொண்டொடி கணவ
நின்னாள், திங்க ளனைய வாக திங்கள்
யாண்டோ ரனைய வாக யாண்டே
யூழி யனைய வாக வூழி
வெள்ள வரம்பின வாகென வுள்ளிக்

ஒன்பதாம் பத்து.

கருரு

காண்கு வந்திசின் யானே செருமிக்
குருமென முழங்கு முரசிற்
பெருநல் யானை யிறைகிழ வோயே.

துறை - காட்சி வாழ்த்து

வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.

பெயர் - (கங) வலிகெழுதடக்கை.

உ. அச்சமென்பது கடைக்குறைந்தது.

இருள் - துன்பம்.

௩. தோன்றி இன்பம் பெருகவெனக் கூட்டுக.

௩ - ௪. தந்துணைத் துறையென்றது பார்ப்பார்முதலானோர் தத்தமக்கு அளவான துறைநூல்களை.

௪. கற்றென்றதனைக் கற்கவெனத்திரிக்க.

௫. கழிந்தோர் - வலியின்மிக்கோர்.

எ. தந்தென்றது, இடவழுவமைதி.

க. வையத்துப்பகலாற்றியென்றது,வையத்தார்கண்ணே நடுவுநிலைமையைச்செய்தென்றவாறு.

கக. செம்மைபூண்டென்றது, செவ்வையைத் தான்பூண்டென்றவாறு.

கஉ. அறனென்றது அறக்கடவுளை. நன்காண்டவென்றதுவலித்தது.
உO. கடலிகுப்பவென்றது கடலைத் தாழ்க்கவேண்டியென்றவாறு.
(உஉ) அருப்பம்வெளவி (உக) மிடல்சாய்த்தெனக்கூட்டுக.
உஈ. பெயரென்றது, பொருளை.
உரு. கட்டிப்புழுக்கு-கட்டியொடுகூட்டின அவரைப்பரல்முதலான புழுக்கு.
உசு. மட்டப்புகா - மதுவாகிய உணவு.
உஎ. எழாத்தோணைத்தோள் - போரில் முதுகிட்டார்மேற்செல்லாத இணைமொய்ம்பு.
ஈஈ. ஞாண்பொர - நாண் உரிஞுதலால்.
இவ்வடைச்சிறப்பானே, இதற்கு, 'வலிகெழுதடக்கை' என்றுபெயராயிற்று.
(ஈச) மொய்ம்பினையுடைய (ஈஈ) தடக்கையென மாறிக்கூட்டுக.
ஈரு. பாண்டிலென்றது, பாண்டிலையுடைய பக்கரையை.
(ஈஎ) காழெஃகம் பிடித்தெறிந்து(ஈஅ)விழுமத்திற் புகலுமென்றதற்குப் பகைவரென்னும் பெயரை வருவித்து, காம்பையுடைய வேலைப்பிடித்தெறிந்து அப்பகைவர்க்கு இடும்பைசெய்கையிலேயே விரும்புமென்றவாறு.



# பதிற்றுப் பத்து.

(சஉ) ஆலும் (சஎ) நாடெனமுடிக்க.
சரு. ஏறு மாறு சிலைப்பவென்றது ஏறுகள் ஒன்றற்கொன்றுமாறாக முழங்கவென்றவாறு.
(சஎ) நன்னுடன்ன (ருO) ஒண்டொடியென முடிக்க.
(கஈ) மருக, (உச) உம்பல், (உரு) கொங்கர்கோவே, (உசு) குட்டுவரேறே, (உஎ) பூழியர் மெய்ம்மறை, (உஅ) மரந்தையோர் பொருந, (ஈO) வயவர்வேந்தே, (ஈக)வயவர்பெரும, (சO) ஓங்குபுகழோய், (ருO)ஒண்டொடி

கணவ், (௫௧) இறைகிழவோய், (௧௪) ஈரமுடைமையின் நீரோரனையை, (௧௫) அளப்பருமையின் விசும்பனையை; (௧௬) கொள்ளக் குறைபடாமை யின் முந்நீரனையை; (௧௭) பூத்தசுற்றமொடு பொலிந்துதோன்றுதலை யுடையை; ஆதலால், (௫௧) நினக்கு அடைத்தநாட்கள் உலகத்தில் இங்க னனையவாகவென்றும் நின்னுடைய திங்கள் (௫௨) யாண்டனையவாக வென்றும் நின்னுடையயாண்டு (௫௩) ஊழியனையவாகவென்றும் நின்யாண்டிற்கு ஒப் பாகிய அப் பல்லூழி தம்அளவிற்பட்ட பலவாய்நில்லாது (௫௪) வெள்ளவரம் பினவாகவென்றும் நினைத்து (௫௫) நின்னைக் காண்பேன்வந்தேனெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் தண்ணளியும் பெருமையும் கொடை யும் சுற்றந்தழாலும் உடன்கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(௬) 'ஒளிறு' என்பதுமுதலாக நான்கடியும் (௧௨) 'அறன்வாழ்த்த' என்பதுமுதலாக இரண்டடியும் (௨௦) 'கடலிகுப்ப' என்பதுமுதலாக இரண் டடியும் (௩௭) 'காழெஃகம்பிடித்தெறிந்து' என ஓரடியும் வஞ்சியடியாகவந் தமையான், வஞ்சித்தூக்குமாயிற்று.

௫௧. 'நின்னுள்' என்பது கூன்.

(பி - ம்.) ௨௭. திணிதோள். ௩௪. வான்றுபுனைந்தன்ன.
௨௬. மயங்கிய. ௩௭. காழ்மூழ்கப். (௯௦)

இதன்பதிகத்து விச்சியென்பான் ஒருகுறுநிலமன்னன், வஞ்சி மூதூர்த்தந்தென்றது, அவர்களைவென்று கொண்ட பொருள்களை; பசுவும் எருமையும் ஆடுமென்பாருமுளர்.

அமைச்சியல் மையூர்கிழானைப் புரோசுமயக்கியென்றது தன்மந்திரி யாகிய மையூர்கிழானைப் புரோகிதனிலும் அறநெறி அறிவானாகப் பண்ணி யென்றவாறு.

(பதிகம்.)

குட்டுவ னிரும்பொறைக்கு *மையூர் கிழாஅன்
வேண்மா ளந்துவஞ் செள்ளை யீன்றமகன்
வெருவரு தானையொடு வெய்துறச் செய்துசென்

## ஒன்பதாம் பத்து.

கருள

திருபெரு வேந்தரும் விச்சியும் வீழ வருமிளைக்
கல்லகத் தைந்தெயி லெறிந்து பொத்தி யாண்ட
பெருஞ்சோ ழனையும் வித்தை யாண்டவிளம்
பழையன் மாறனையும் வைத்த வஞ்சினம் வாய்ப்ப
வென்று
வஞ்சி மூதூர்த் தந்துபிறர்க் குதவி
மந்திர மரபிற் றெய்வம் பேணி
மெய்யூ ரமைச்சியன் மையூர் கிழானைப் புரையறு
கேள்விப் புரோச் மயக்கி
யருந்திறன் மரபிற் பெருஞ்சதுக் கமர்ந்த
வெந்திறற் பூதரைத் தந்திவ ணிரீஇ
யாய்ந்த மரபிற் சாந்தி வேட்டு
மன்னுயிர் காத்த மறுவில் செங்கோ
வின்னிசை முரசி னிளஞ்சேர லிரும்பொறையைப்
பெருங்குன்றூர்கிழார் பாடினர் பத்துப்பாட்டு.

(பி - ம்) * வம்மையூர் கிழாஅர்; மேயூர் கிழான்.

அவைதாம்: நிழல்விடுகட்டி, வினைநவில்யானை, பஃறோற்றொழுதி, தொழினவில்யானை, நாடுகாணவவரை, வெந்திறற்றடக்கை, வெண்டலைச் செம்புனல், கல்கால்கவணை, துவராக்கூந்தல், வலிகெழுதடக்கை; இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில்: மருளில்லார்க்கு மருளக் கொடுக்கவென்று உவகையின் முப்பத்தீராயிரங்காணம் கொடுத்து அவர் அறியாமை ஊரும் மனையும் வளமிகப்படைத்து ஏரும்இன்பமும் இயல்வரப்பரப்பி எண்ணற்கு ஆகா அருங்கலவெறுக்கையொடு பன்னூறாயிரம் பாற்படவகுத்துக் காப்புறம் தான்விட்டான் அக்கோ.

குட்டக்கோ இளஞ்சேரலிரும்பொறை பதினாறாண்டு வீற்றிருந்தான்.

## ஒன்பதாம் பத்து முற்றிற்று.

---

## பதிற்றுப்பத்துச் செய்யுளகராதி.

# பிரயோகவிளக்கம்.

| | பதிற்றுப்பத்துச் செய்யுளின் எண். | பாட்டின் பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி. | சூத்திர முதலிய வற்றின் எண். | இன்னவுரை யென்பது. | அச்சுப்புத்தகத்தின் பக்க எண். |
|---|---|---|---|---|---|---|---|
| க | உ | ந | ச | ரு | சு | எ | அ |
| | கக | உந | தொல். | சொல். | நநஉ | ந. | உ0அ |
| | ,, | ,, | இ-வி. | | உக0 | | உருஎ |
| | கஉ | உக | தொல். | ,, | உநசு | ,, | கசுஉ |
| | ,, | ,, | இ-வி. | | உசந | | உகஎ |
| * | கந | மு. | தொல். | பொருள் | எரு | ,, | கசுந |
| | ,, | எ | சீவக. | காந்த. | கசுக | ,, | |
| * | ,, | கஉ | தொல். | சொல். | நஎஉ | ,, | உஉ0 |
| * | ,, | கச | ,, | ,, | நகஎ | ,, | உ0ச |
| * | ,, | ,, | ,, | ,, | நஅக | ,, | உஉச |
| * | ,, | உ0, உச | சீவக. | இலக். | உ0க | ,, | |
| * | கச. | மு. | தொல். | பொருள் | அஉ | ,, | ககச |
| * | ,, | க, உ | ,, | சொல். | உகந | ,, | ,, |
| * | ,, | மு. | இ-வி | | எருஎ | | எஅக |
| * | கரு | க-கஅ | தொல். | பொருள் | சுந | ,, | கஉஎ |
| | ,, | க0 | சீவக. | நாம. | ச0 | ,, | |
| * | உக | க-அ | தொல். | பொருள் | எரு | ,, | கசுஉ |
| | ,, | க | பத். | முருகு. | | ,, | ருக |
| * | ,, | உந - கூ | தொல். | பொருள் | அசு | ,, | ககூஅ |
| | உஉ | க-ரு | குறள், | | சநஉ | பரி. | |
| * | உச | கூ-அ | தொல். | ,, | எரு | ந. | கசு0 |
| * | ,, | உச | ,, | சொல். | நநசு | ,, | உ0கூ |
| | ,, | கஅ | சீவக. | கனக. | உஅஎ | ,, | |
| * | உரு | மு. | தொல். | பொருள் | அகூ | ,, | உ0உ |
| | உஅ | ,, | புறத். | நாடு. | கஅ | | |
| * | உகூ | ,, | தொல். | பொருள் | அ0 | ,, | கக0 |
| * | ந0 | ,, | ,, | ,, | சுந | ,, | கந0 |
| * | ,, | உஅ - கூ | சீவக. | கனக. | கூஉ | ,, | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| * | [illegible] | மு. | [illegible] | [illegible] | [illegible] | ,, | [illegible] |

* இது, தனக்குநேரேயுள்ளபதிற்றுப்பத்துச் செய்யுளுக்குக்குறிப்பிட்ட நூல்களின் பழையவுரையில் விசேடவுரையிருத்தலைப் புலப்படுத்துவது.



# பிரயோகவிளக்கம்.

| | பதிற்றுப்பத்துச் செய்யுளின் எண். | பாட்டின்பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி. | சூத்திர முதலிய வற்றின் எண் | இன்னுரை யென்பது. | இப்புத்தகப் பக்க எண். |
|---|---|---|---|---|---|---|---|
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ |
| * | ௪௪ | ௯-௧௰ | பத். | பெரும்பா. | | ௩. | ௧௭௰ |
| | ௫-பதி | மு. | சிலப். | பதி. | | அடி. | ௧௧ |
| * | ௫௨ | ௨௧ | சீவக. | நாம. | ௧௰௫ | ௩. | |
| * | ,, | ,, | ,, | குணமா. | ௧௬௪ | ,, | |
| * | ௫௬ | மு. | தொல். | பொருள் | ௭௬ | ,, | ௧௭௧ |
| * | ௬௩ | ,, | ,, | ,, | ௮௰ | ,, | ௧௯௰ |
| * | ,, | ௪-௫ | பத். | சிறுபா. | | ,, | ௧௨௫ |
| * | ௬௫ | ௧௨ | தொல். | சொல். | ௨௩௩ | ,, | ௧௫௧ |
| * | ௬௯ | மு. | ,, | பொருள் | ௯௰ | ,, | ௨௰௪ |
| * | ௭௧ | ,, | ,, | ,, | ௬௩ | ,, | ௧௩௧ |
| * | ,, | ௨௩-௪ | சீவக. | சுர. | ௧௬ | ,, | |
| | ௭௩ | ௧ | பத். | சிறுபா. | | ,, | ௧௨௧ |
| * | ௭௪ | மு. | தொல். | பொருள் | ௭௫ | ,, | ௧௯௨ |
| * | ,, | ,, | ,, | ,, | ௭௬ | ,, | ௧௭௬ |
| * | ௭௪ | ௧௨ | சீவக. | மண். | ௧௰௨ | ,, | |
| * | ,, | ௨௧-௨ | ,, | ,, | ௪௰ | ,, | |
| * | ௭௭ | மு. | தொல். | பொருள் | ௭௬ | ,, | ௧௭௩ |
| * | ௮௰ | ,, | ,, | ,, | ௬௩ | ,, | ௧௩௧ |
| | ௯௰ | ௨௩ | பத் | முருகு. | | ,, | ௫௧ |

# அரும்பத முதலியவற்றின் அகராதி.

எண்களுள், 'ப' என்பதன் பின்னுள்ளவைகள்

பக்கத்தை

யும், மற்றவைகள் பாடல்கள் அல்லது அப்பாடல்களின் உரைகளை
யும் குறிப்பன.

# கசுஉ அரும்பத முதலியவற்றின் அகராதி.

## அரும்பத முதலியவற்றின் அகராதி. கசுரு

## கசுச அரும்பத முதலியவற்றின் அகராதி.

# அரும்பத முதலியவற்றின் அகராதி.

கசீரு

ஆ சா சா

# அரும்பத முதலியவற்றின் அகராதி.

கடம்பறுத்தியற்றியபணை, 17.
கடம்பின் பெருவாயில் - நன்னனூர், 4 - ஆம்பதிகம்.
கடம்பின் பெருவாயினன்னனை நிலைச் செருவிறைற்றலை யறுத்து அவன் பொன்படு வாகை முழு முதலை [11.
கடிப்புடை, 84.
கடிமரம் - காவன்மரம், 33.
கடுக்கை - கொன்றை, 43.
கடுஞ்சினவிறல்வேள் களிறூர்தரல், கடுந்தேறுறுகிளை - கடிதாகத்தெறுதல் மிக்க குளவியினம், 71.

அரும்பத முதலியவற்றின் அகராதி. கசுள

# கஉஅ அரும்பத முதலியவற்றின் அகராதி.

# கஎஉ அரும்பத முதலியவற்றின் அகராதி.

# கஎஅ அரும்பத முதலியவற்றின் அகராதி.

## அரும்பத முதலியவற்றின் அகராதி. ௧௭௯

# கஅ௦ அரும்பத முதலியவற்றின் அகராதி.

# அரும்பத முதலியவற்றின் அகராதி.

# அரும்பத முதலியவற்றின் அகராதி.

கஅரு

# கஅச அரும்பத முதலியவற்றின் அகராதி.





# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 3 | 31 | வெண் ணல | வெண்ணெல். |
| 14 | 33 | பர்யலென | பாயலென. |
| 30 | 1 | பதிற்றும்பத்து | பதிற்றுப்பத்து. |
| 47 | 29 | வகையுநர் | வசையுநர். |
| 47 | 29 | பசைவரென்றது | பகைவரென்றது. |
| 52 | 4 | மங்யகு | மயங்கு. |
| 61 | 8 | அக.ளிறு | அ. களிறு. |
| 96 | 1 | கூகூ | கூ௫. |